ஸ்ரீ

# அண்ணாவின் கால நிர்ணயம்

---

தேவகோட்டை ஸ்தானாதிபதி,

ஜோஸ்யர்

ஸ்ரீ. உ. வே. ஸ்ரீமான். கோவிந்தராஜ ஐயங்கார்

---

அண்ணாவின் கால நிர்ணய விஷயமாய் இரண்டு மூன்று ஜோசியர்கள் கணித்ததில் எல்லா கணிதங்களும் ஒரே விதமாயிருப்பதால், ராமநாதபுரம் ஜோஸியர் ஸ்ரீமான் ராமஸ்வாமி அய்யங்காருடைய கணிதமே இதில் அச்சிடப்பட்டுள்ளது.

---

திருவரங்கம் பெரிய கோயில் **Rgd. No.—M. 2637**

பவ, ஆடி—அனுபந்தம், 1934 ஜூலை

---

இம்பீரியல் பிரஸ்,

பெரிய கம்மாளத் தெரு, திருச்சி.

---

ஸ்ரீ

# அண்ணாவின் கால நிர்ணயம்

தேவகோட்டை ஸ்தானாதிபதி,

ஜோஸ்யர்

ஸ்ரீ. உ. வே. ஸ்ரீமான். கோவிந்தராஜ ஐயங்கார்

திருவரங்கம் பெரிய கோயில் **Rgd. No.—M. 2637**

பவ, ஆனி—அனுபந்தம், 1934 ஜூலை

இம்பீரியல் பிரஸ்,

பெரிய கம்மாளத் தெரு, திருச்சி.

# பத்திராதிபரின் குறிப்பு

ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா கலி 4463ல் அவதரித்து 4555ல் பரமபதித்தவர். பிலவ, ஆடி, வியாழன், கிருஷ்ண சதுர்த்தசி, பூசம்—அவதார தினம்; ஸ்ரீமுக, பங்குனி, புதன் சுக்லநவமி, பூசம் பரமபதித்த தினம். அண்ணா மணவாளமாமுனிகளை ஆச்ரயித்த உண்மையை இல்லையென்று ஸ்தாபிப்பதற்காக அவதார வருஷம் 4463ஐ 4403 ஆகவும், பரமபதித்த வருஷம் 4555ஐ 4496ஆகவும், மாற்றி 60வருஷம் முன்னால் வைத்து, அந்தந்தத் திதி வார நக்ஷத்திர ஸம்யோகம் தாம் சொல்லும் வருஷத்துக்கேயுள்ளதென்று சோழவரம், தட்டை, ராமானுஜாசார் ஸ்வாமி வெகு எளிதாக எழுதிவிட்டார். தம்முடைய கக்ஷிதவிர, பிறருடைய கக்ஷியை ஜோதிஷர்கள் பரிஹஸிக்க நேரிடுமென்றும் சோழவரம் ஸ்வாமியால் எழுதப்பட்டிருக்கிறது. இவர் தம்முடைய கக்ஷியை ஜோதிஷ சாஸ்திரமூலமாய் நிரூபிக்கவே யில்லை. தத்வாந்வேஷணத்திலேயே நோக்கமுள்ள பிராமணிகர்களுக்கு இவ்விஷயத்தை தீர்மானிக்க வேண்டியது அவசியமாயிற்று. மேற்கண்ட வருஷ மாஸ வாரங்களின் திதிநக்ஷத்திரங்களை கணித்து ஆராய்ச்சி செய்யுமாறு அண்ணங்கராசார் ஸ்வாமி அநேகம் கணிதக்ஞர்களுக்கு எழுதிக்கொண்டிருந்தார்.

தேவகோட்டை ஸ்தானாதிபதி, ஜோஸியர். ஸ்ரீமான். கோவிந்தராஜ ஐயங்கார் ஸ்வாமி இவ்விஷயத்தைத் தீர்மானிக்க முன்வந்தார்; பிரதிவருஷமும் பஞ்சாங்கம் கணிக்கும் இரண்டு மூன்று கணிதக்ஞர்களின் குறிப்பையும் ஆதாரமாகக் கொண்டு இந்த வியாஸம் எழுதியுள்ளார். அந்த கணித வித்வான்களுடைய குறிப்புகளின் அஸல்களும் நம்மிடம் ஆதாரமாக அனுப்பப்பட்டுள்ளன. வெகு ஸூக்ஷ்மமாக ஆராய்ச்சி செய்து விவாதக்ரஸ்தமான வருஷ மாஸ தினங்களில் திதிநக்ஷத்திரங்கள் நாழிகை வினாடியோடு கணிக்கப்பட்டிருப்பதை விவரமாகக் காண்க. இந்த கணனம் முழுவதும் வாக்ய ரீதியை அவலம்பித்துள்ளது. அண்ணாவின் அவதார அவஸாநக் கலி வருஷங்கள் 4463, 4555 என்ற உண்மை நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும், கலி 4463க்கு ப்லவவருஷ இல்லை சுபகிருது என்றும், 4555க்கு ஸ்ரீமுகவருஷ இல்லை பவ என்றும் திதி வார நக்ஷத்திர ஸம்யோகத்தைக் கொண்டு சோதித்திருப்பது காண்க.

இவ்வளவு ஸூக்ஷ்மமாகவும் நிஷ்பக்ஷபாதமாகவும் ஆராய்ச்சி செய்ததை யாரேனும் பொய்பாக்கப் புறப்படுவார்களாகில், இங்கு காட்டப்பட்ட மாதிரி கணித்து நிரூபிப்பார்களாக.

ஸ்ரீ

# அண்ணாவின் கால நிர்ணயம்

---

## 1—பீடிகை.

காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ. உ. வே. வித்வான் அண்ணங்கராசார் ஸ்வாமி சென்ற ஏப்ரல் மாதத்தில் அடியேனுக்கு இரண்டு புஸ்தகங்களை யனுப்பி, அவற்றை ஆராய்ச்சி செய்து கணிதவகையில் எனது அபிப்ராயத்தை வெளியிடும்படி நியமித்தருளினார்.

அந்த இரண்டு புஸ்தகங்களாவன—(1) சோழவரம் தட்டை ராமாநுஜாசார் ஸ்வாமி பெயரால் வெளிவந்திருக்கிற வித்வந் மநோரஞ்ஜனம். (2) அண்ணங்கராசார் ஸ்வாமி வெளியிட்டிருக்கிற ஸத்ஸம்ப்ரதாயப்படியென்னும் அண்ணா வைபவ விளக்கம். இவற்றுள் முதலாவது பூர்வபக்ஷ நூல், இரண்டாவது ஸமாதான நூல். இவ்விரண்டு புஸ்தகங்களையும் வெகு பரிச்ரமத்துடன் அடியேன் ஆராய்ச்சி செய்து பார்த்ததில் கணித முறையில் அடியேனுடைய சிற்றறிவுக்கு எட்டிய விஷய வுண்மையை இப்போது ஸ்ரீவைஷ்ணவ வுலகத்தார் யாவரும் நன்றாய்த் தெரிந்து கொள்ளும்படி விக்ஞாபநம் செய்து கொள்கிறேன்.

## 2—பூர்வபக்ஷம்.

கலி௵ 4403, ஆடி௴ கிருஷ்ண சதுர்த்தசியும் வியாழக் கிழமையும் கூடின புஷ்ப நக்ஷத்திரத்தில் அவதரித்து கலி 4496, பங்குனி௴ புதன்கிழமையும் புஷ்ய நக்ஷத்திரமும் கூடின சுக்ல நவமியில் பரமபதித்தவராக வைபவக்ரந்தத்தில் சொல்லப்படுகிற ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா, கலி௵ 4471ல் திருவவதரித்து கலி௵ 4544ல் பரமபதித்தவரான மணவாள மாமுனிகளின் ஸந்நியாஸ தசையில் ஜீவித்திருந்ததாகச் சொல்வது அஸம்பாவிதம்—என்கிற பூர்வபக்ஷியின் ஒரு விஷயத்திலேயே அடியேனுடைய ஆராய்ச்சியை வெளியிடுகிறேன்.

அண்ணா கலி௵ 4403ல் அவதரித்தாரென்பதே உண்மையானால் பூர்வபக்ஷியின் ஆக்ஷேபவாதம் வெற்றி பெற்றே நிற்கும்.

ஆனால், அந்த வருஷத்தில்தான் அண்ணா அவதரித்தாரென்பதற்குப் பூர்வபக்ஷி ஸர்வ ஸம்மதமாகக்கூடிய ப்ரமாணம் ஒன்றுகூட எடுத்துக்காட்டவில்லை. மறுக்க முடியாத சாஸனம் முதலியவைகளால் அண்ணாவின் அவதாரம் கலிஹு 4403ல்தான் என்று ஏற்பட்டு விடுமானால் பூர்வபக்ஷியின் வாதத்திற்கு பலம் ஏற்படும். அது இல்லை.

முற்காலத்திலிருந்த அநேக மஹான்களின் ஜீவிதகாலத்தை நிர்ணயிக்க அநேக சாஸனங்கள் மறுக்கவும் மறைக்கவும் முடியாதவைகளாய் இன்றைக்கும் விளங்குகின்றன. அப்படிப்பட்ட சாஸனம் முதலியவை அண்ணா விஷயத்திலும் இருக்கக்கூடியவைகளே. ஆனால், பூர்வபக்ஷியானவர் அப்படிப்பட்ட ஒரு சாஸனத்தையும் உதாஹரிக்கவில்லை; வேறு எவ்விதமான பிரமாணமும் காட்டவில்லை. அண்ணாவைபவம் வெளியிட்டவர்கள் அண்ணா அவதரித்த வருஷமாகவும் பரமபதித்த வருஷமாகவும் எந்தக் கலி வருஷத்தை வெளியிட்டிருக்கிறார்களோ அதை மாத்திரம் பூர்வபக்ஷியானவர் பிடித்துக் கொண்டு வாதம் செய்திருக்கிறார்.

## 3—ஸமாதானம்.

ஸமாதானக்ரந்தத்தை ஆழ்ந்து ஆராயும்போது மணவாளமாமுனிகளுக்கும் அண்ணாவுக்குமிருந்த ஆசாரிய சிஷ்ய ஸம்பந்தத்தைப் பற்றி ஸர்வஸம்மதக்ரந்த ப்ரமாணங்கள் மிகவும் பிராமாணிகங்களாகவும் ஒரு வகையிலும் மறுக்க முடியாதவைகளாகவும் பிரபல சாஸன ரூபங்களாகவும் பல பல காணப்படுகின்றன.

அண்ணங்கராசார் ஸ்வாமி ஒன்றுமுதலாக எழுபத்தினன்கு வரையில் லக்கம் கொடுத்து எழுதியுள்ள ஒவ்வொரு பாராவையும் விமர்சித்துப் பார்க்கும்போது அடியேனுடைய இந்த வியாஸம் மிகவும் அநபேக்ஷிதம் என்பது விளங்கும். அந்த விஷயங்களின் ஸ்வாரஸ்யத்தைப்பற்றி அடியேன் எழுதுவதற்கும் அசக்தன். பூர்வபக்ஷியின் வாதமெல்லாம் கணித விஷயமொன்றிலேயே நிற்கிறபடியால் அதைப் பற்றிமாத்திரம் அடியேன் விவரித்தெழுத முன் வருகிறேன்.

அண்ணாவின் அவதார — அவஸாந — கலி வருஷம் அச்சுப்பிழையாக விழுந்திருக்கிறதென்றும் அந்தப் பிழை முன்னமேயே திருத்திப் பதிப்பிக்கப்பட்டுமிருக்கிறதென்றும் அண்ணங்கராசார் ஸ்வாமி

விரிவாக நிரூபித்திருக்கிறார். இப்படி ஏற்கனவே நிரூபிக்கப்பட்டிருக்கிறதென்பதைப் பூர்வபக்ஷியும் தெரிந்துகொண்டு தமது நூலில் (பக்கம் ௨ல்) "அண்ணாவின் அவதாரகாலமான 4403வது வருஷத்தை 4463வது வருஷமாக மாற்றத் துணிவதற்கு ஜ்யோதிஷம் இடம் கொடாததுடன் ஜ்யோதிஷர்கள் பரிஹஸிக்கவும் நேரிடும். ஆகையால், இவ்வழியில் பிரவேசிக்காமலிருப்பதே உசிதம்"—என்று எழுதியிருக்கிறார்.

இந்த பாகத்துக்கு அண்ணங்கராசார் ஸ்வாமி விடையளிக்குமிடத்து—அண்ணாவின் அவதார தினத்திற்குக் குறிக்கப்பட்டிருக்கிற திதி வார நக்ஷத்திரங்கள் கலி௵ 4463க்கு இணங்காமல் 4403க்குத்தான் இணங்குகிறதென்பதைப் பூர்வபக்ஷி ஜ்யோதிஷர்களின் முன்னே நின்று நிரூபித்துவிடவேண்டுமென்றும் இதற்காக ஒரு ஸபை ஏற்படவேண்டுமென்றும் பலவிடங்களில் ப்ரஸ்தாவம் செய்திருக்கிறார். பூர்வபக்ஷி அதன்படிக்கு இதுவரையில் ஒரு முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை போலும்! அவர் நிபுணரான ஜ்யோதிஷர்களுடன் கலந்து விசாரித்து உண்மையைத் தெளிந்துகொண்டிருக்கக் கூடுமென்றே நம்புகிறேன். அந்த உண்மையைத்தான் இதில் அடியேன் தெரிவிக்கிறேன்.

அண்ணாவின் அவதார காலத்தில் ஆடி மீ கிருஷ்ணபக்ஷ சதுர்த்தி வியாழக்கிழமை புஷ்யநக்ஷத்திரமென்று வைபவ நூல்கள் கூறுகின்றன. இதைப் பூர்வபக்ஷியும் அங்கீகரித்திருக்கிறார். இந்தத் திதி வார நக்ஷத்திர ஸமவாயம் கலி௵ 4403க்குத்தான் இணங்குகிறதென்கிறார் பூர்வபக்ஷி. கலி௵ 4463க்குத்தான் இணங்குகின்றதென்கிறார் ஸமாதானக்காரர்.

## 4—ஆராய்ச்சி.

வாக்யரீதியில் கணித்துப்பார்த்தால் கலி௵ 4403 ஆடி மாதம் புஷ்ய நக்ஷத்திரத்தில் சதுர்த்தியும் கிடையாது; வியாழக்கிழமையும் கிடையாது. கலி௵ 4463ல்தான் இவையெல்லாம் பொருந்துகின்றன. இந்த விவரத்தை விசதமாகக் கீழே காண்க.

கலி **4403,** ஆடி மீ 27௳ செவ்வாய்க்கிழமை, கிருஷ்ண சதுர்த்தி 47-53க்குமேல் அமா, புநர்வஸு 3-45க்குமேல் பூசம். இதில் வியாழக்கிழமை கூடவில்லை.

கலி 4463 ஆடி 24உ வியாழன் கிருஷ்ணசதுர்த்தசி 2-34க்கு மேல் அமா 55-33, பூசம் 32-46.

இந்த இரண்டையும் கணித்தால் அண்ணாவின் அவதாரம் கலிவருஷம் 4403ல் இல்லை, 4463ல்தான் என்பது ஸ்பஷ்டமாக விளங்கும்.

இனி அண்ணா பரமபதித்தகாலக் குறிப்பைப் பற்றியும் ஆராய்வோம்: பங்குனியீ' புதன்கிழமையும் புஷ்ய நக்ஷத்திரமும் கூடின சுக்லநவமீ திதியில் அண்ணா பரமபதித்ததாக வைபவத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இந்த திதி வார நக்ஷத்ர ஸமவாயம் கலிவருஷம் 4496க்குத்தான் கூடுகிறதென்றும் மற்றொன்றுக்குக் கூடவில்லை என்றும் பூர்வபக்ஷி அபிப்ராயப்படுகிறார். இதுவும் தவறு.

கலி 4493 பங்குனி 23உ சனிக்கிழமை, சுக்ல நவமி திதி 46-44, புநர்வஸு 11-47க்கு மேல் பூசம். இதில் புதவாரயோகம் இல்லையென்பது ஸ்பஷ்டம், வைபவக் கிரந்தம் சொல்லுகிறபடி கலிவருஷம் 4556க்கும் இந்தத் திதி வார நக்ஷத்ர ஸமவாயம் கூடவில்லை. அப்போதும் பூசமும் நவமியுமிருந்தாலும் கிழமை திங்களேயொழிய புதன் அல்ல.

அதற்குக் கீழ்வருஷமாகிய கலி 4555, பங்குனி 30உ புதன், சுக்லாஷ்டமி 50-39க்கு மேல் நவமி, புநர்வஸு 40-28க்கு மேல் பூசம். இன்று நாழிகை 50-39க்கு மேல் புதனும் நவமியும் பூசமும் கூடுகின்றன. ஆகவே, அண்ணா பரமபதித்தது கலி 4555 பங்குனியீ' 30உ என்று விளங்குகிறது.

கலி 4494, பங்குனியீ' 16உ புதன், சுக்லநவமி 59-19, புநர்வஸு 58-0க்கு மேல் பூசம். ஆதலால், இந்த நாளையும் அண்ணாவின் பரமபத யாத்ராதினமாகச் சொல்லக் கூடுமானாலும், இப்படிக் கொண்டால் அண்ணா தமது முப்பத்தோராவது பிராயத்திலேயே பரமபதித்து விட்டாரென்றும் வேதாந்த தேசிகரின் குமாரருடைய இளம் பிராயத்திலேயே (அண்ணா) பரமபதித்து விட்டாரென்றும் சொல்ல வேண்டியதாக நேருகிறது. இது ஒரு ஸம்பிரதாயஸ்தரும் ஒப்பாத விஷயமாகும்; சரித்திரத்திற்கும் அடியோடு பொருந்தாது. தவிர, பூர்வபக்ஷியும் கலி 4494ல் அண்ணாவின் பரமபதயாத்திரையென்று அங்கீகரிக்கவில்லை.

ஆக இவ்வளவாலும் நிச்சயிக்கப்பட்டதாவது—கலிவருஷம் 4463 [கி. பி. 1362ல்] அவதரித்து, கலி 4555 [கி. பி. 1454]ல் பரமபதித்த அண்ணா, கலி 4471 [கி. பி. 1370]ல் அவதரித்து, கலி 4544 [கி.பி. 1443]ல் பரமபதித்தவரான மணவாளமாமுனிகளுக்குப் பின்னால் பதினொரு வருஷங்கள் ஜீவித்திருந்தாரென்பதே.

## 5—மற்றொரு ஆராய்ச்சி.

மேற்குறித்த கலிவருஷங்களுக்குச்சரியான ப்ரபவாதி வருஷங்கள் பெரும்பாலும் வைபவ நூல்கள் ஒன்றிலும் அமையவில்லையென்பதும் இங்கு அடியேன் விக்ஞாபிக்கவேண்டிய விஷயம். இது அண்ணா வைபவத்தில் மாத்திரமன்று. மற்றுள்ள ஆசாரியர்களின் வைபவ நூல்களிலும், கலிவருஷக் குறிப்பு சாலிவாஹந சக வருஷக் குறிப்பு, கி. பி. வருஷக்குறிப்பு, பிரபவாதி வருஷக்குறிப்பு என்னுமிவை இணங்கி வருவதில்லை. வேதாந்த தேசிகருடைய காலத்தைப் பற்றிப் பல பல நிபுணர்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். அதில் ஒன்றாவது பொருந்தியதாக இல்லையென்பதை இங்குக் காட்டுகிறேன்:

த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி செய்தருளின மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவ மென்று பல பதிப்புகள் வெளிவந்திருக்கும் புஸ்தகத்தில் "கலியுகத்தில் 4371 ஆவதான சுக்லவருஷத்தில் தேசிகருடைய அவதார" மென்று எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். கலி 4371க்கு ப்ரமோதூதவருஷம் ஆகுமேயல்லது சுக்லவருஷமாகாது.

தேசிகராருளிச் செய்த ந்யாய பரிசுத்தியின் பூமிகையில், கி. பி. 1270, விபவ வருஷத்தில் தேசிகருடைய அவதார மென்று சதாவதானம் ஸ்ரீநிவாஸாசார்யரால் எழுதப்பட்டிருக்கிறது. கி. பி. 1270க்கும் ப்ரமோதூதவருஷம் ஆகுமேயல்லது விபவவருஷம் ஆகாது.

பம்பாய் நகரத்திலச்சிட்ட ஸவ்யாக்யாந பாதுகாஸஹஸ்ரத்தின் பூமிகையில் காஞ்சீபுரம் ஸ்ரீசைல தாதாசாரியர் "கலி 4370, கி. பி. 1268 விபவவருஷத்தில் தேசிகாவதாரம்" என்று எழுதியிருக்கிறார். கலி 4370க்கு சுக்ல வருஷமே யுள்ளது. அதற்கு கி. பி. வருஷமும் 1269 தான் ஆகும்.

ஸங்கல்பஸூர்யோதய உரையின் உபோத்காதத்தில் சேட்லூர் நரஸிம்மாசாரியார் "கலி 4370 கி. பி. 1268 விபவ௵த்தில் தேசிகாவதாரம்" என்றெழுதியிருக்கிறார். இதுவும் பொருந்த மாட்டாது. விபவ வருஷத்திற்குக் கலி 4369 உள்ளதேயன்றி 4370 இல்லை. இவரே வேறொரு தேசிகப்ரபாவ புஸ்தகத்தில் கலி 4369ல் தேசிகரின் அவதாரமென்கிறார். அந்தப் புஸ்தகத்தில்—(பக்கம் 130ல்)

"கலி ஆரம்பம்* கி. மு. 3101 என்றும் 3102 என்றும் இரண்டு பக்ஷங்கள் இருக்கின்றன. இந்தக்காரணத்தினால் வர்த்தமான கலி ஸங்க்யையில் பஞ்சாங்கங்களில் ஒருவருஷம் ஏற்றத்தாழ்வு காணப்படுகிறது. இந்த விமர்சத்தில் ஸ்ரீரங்கம் பஞ்சாங்கத்தைத்தழுவி கலி ஆரம்பம் கி. மு. 3101 என்கிற பக்ஷம் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. இப்படி ஒரு வருஷம் வித்யாஸம் இருப்பதினாலே கலிவருஷ ஸங்க்யையைக்கொண்டு முதல் முதலில் வருஷத்தை நிர்ணயித்தவர்கள் சுக்ல௵ என்றெழுதியிருக்கவேண்டும். பிற்பாடு கலிவருஷ வித்யாஸத்தை சரிப்படுத்துவதற்காக அந்த வருஷ ஸங்க்யையும் மாற்றப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது."

என்றெழுதப்பட்டிருப்பதையும் காணலாம்.

ஆகவே, கலிவருஷக்குறிப்பும் ப்ரபவாதி வருஷக் குறிப்பும் நெடுநாளாகவே பிறழ்ந்து வருகின்றதென்பதை யாரும் அபலாபம் செய்ய முடியாது. தேசிகப்பிரபந்தத்தோடு சேர்த்து வெளியிட்டிருக்கிற ப்ரபந்தாநுஸந்தாந தீபிகையில் பல ஆசாரியர்களுக்குக் கலி௵க் குறிப்பும் பிரபவாதி வருஷக்குறிப்பும் அமைத்திருப்பதில் இப்படியே பிறழ்வுகள் உள்ளமையை ஸ்பஷ்டமாகக் காணலாம். இத்தகைத்தான லேகக ப்ரமாத நிபந்தனமான பிறழ்வோ அச்சுப் பிறழ்வோ அண்ணாவைபவத்திலும் விளைந்திருப்பது ஸஹஜமேயாயிற்று. அண்ணா அவதாரமான கலி௵ 4463க்கு ப்லவ௵ இல்லை. (4403க்கும் ப்லவ௵ இல்லை.) ஸுபக்ருத௵ என்பதே ஸித்திக்கும். இவ்விதமே அண்ணாவின் பரமபதயாத்ரா வருஷமும் ஸ்ரீமுக வருஷம் அன்று; பவ வருஷமே யென்பதும் ஸித்தம்.

* கி. மு. என்பது கிறிஸ்து பிறந்த வருஷத்திற்கு முன்னே என்று.

## 6— நிகமனம்.

ஒவ்வொரு ஆசார்யருடையவும் திருவவதாரத்திற்கும் பரமபத யாத்திரைக்கும் ஏற்பட்டிருக்கிற பெரிய பெரிய சுலோகங்கள் அந்த ஆசார்யர்களின் காலத்திலேயே அவதரித்தவைகளென்று நம்புவதற்கிடமில்லை. பின்புள்ளார்கள் அநுஸந்தானத்திற்காக எழுதிச் சேர்த்துக் கொண்டவை யென்றே நிச்சயிக்கவேண்டியதாகிறது. ஆப்தியதிசயம் தோன்றுவதற்காகவோ பின்னவரும் பேணிக் கற்பதற்காகவோ அவை ப்ராசீநப்ராணீதமென்று குறிக்கப்பட்டிருக்கலாம். இது மிகச் சிறிய விஷயம். இவ்விஷயத்தில் அனேக நிதர்சனங்களை நிரூபிக்கப் புகுந்தால் மிகவும் விரிவாகும்.

இதைப்பற்றி அடியேன் இங்கு எதற்காக இவ்வளவு எழுதுகிறேனென்றால், அண்ணா வைபவத்தில் ப்ரபவாதி வருஷக் குறிப்பானது கலி வருஷக் குறிப்போடு ஒத்திருக்கவில்லை; ஒரு வருஷம் கீழது மேலதாகப் புரண்டிருக்கிறதென்கிற விஷயம் பூர்வபக்ஷியாலும் க்ஷேபிக்கப்படவில்லை. அடியேனுடைய ஆராய்ச்சியில் கிடைத்த விஷயம் இது. இதை அவலம்பித்துக் கொண்டு இனி பூர்வபக்ஷியானவர் ஏதாவது அவத்யம் சொல்ல விரும்பினாலும் அது பயன் பெறாது. ஸகல பூர்வாசார்யர்களுடையவும் காலக்குறிப்பில் இந்தப் பிறழ்வு ஏறியே யிருப்பதால் இது ஒரு விஷயமாக எடுத்துக் கொள்ளத் தக்கதேயன்று என்பதைக் காட்டி நின்றேன்.

அண்ணாவின் அவதாரகாலமாக வைபவத்தில் முதலில் பதிப்பித்திருந்த 4403 கலி௵ என்பதைப் பிழைதிருத்தத்தில் மாற்றி 4463 என்று குறித்திருந்ததைக்கண்ட பூர்வபக்ஷியானவர் இந்தத் திருத்தம் ஜ்யோதிஷர்கள் பரிஹஸிக்கக்கூடியதென்று கை கூசாமல் எழுதி விட்டார். திருத்தம் செய்யாமல் உள்ளபடியே பொருந்த விட எந்த ஜ்யோதிஷராலுமாகாதென்பது திண்ணம். கலி 4403 ப்லவ௵ ஆடி ௴ புஷ்யத்தில்தான் அண்ணாவின் அவதாரமென்றும் அன்றைக்குத்தான் க்ருஷ்ண சதுர்த்தசியும் வியாழக் கிழமையும் கூடுகின்றதென்றும் பூர்வபக்ஷி அபிப்ராயப்படுவது ஜ்யோதிஷத்திற்குச் சிறிதும் சேரமாட்டாது. அவசியம் திருத்தம் செய்தேயாக வேண்டும்.

## 7—கணிதம்.

இவ்விஷயத்தைக் கண்ணாடி போல் காட்டுவதற்காக இவ்விடத்தில் ஒரு டேபிள் காட்டப்படுகிறது.

(1) கலி 4402, பிலவ, ஆடி—

9வ புதன், சசி 47-38, திருவாதிரை 22-58.
10வ வியாழன், அமா, 41-33, புந 18-52.
11வ வெள்ளி, பிரதமை 35-37, பூசம் 14-52.

இந்த மூன்று தினங்களையும் கவனித்தால் முந்தின ப்லவ வருஷத்தில் அண்ணா அவதாரம் பொருந்தாதென்பது விளங்கும். முதலாவதில் கிழமையும் இரண்டாவதில் திதியும் கூடவில்லை. மூன்றாவதில் கிழமையும் திதியும் கூடவில்லை.

(2) கலி 4403, சுபக்ருத், ஆடி—

27வ செவ்வாய், சசி 47-53, புன 3-45.
28வ புதன், அமா 42-7, பூச 0-12க்குமேல் ஆயி 56-8.

4403ல் அவதாரம் பொருந்தாதென்பது இதனால் விளங்கும்.

பிந்தின பிலவ ஆடியிலாவது அவதாரம் பொருந்துமா என்று பார்த்தால் அதுவும் பொருந்தாது.

(3) கலி 4462, பிலவ, ஆடி—

4வ வியாழன், திரயோதசி 9-50, திருவாதிரை 57-49.
5வ வெள்ளி, சசி 6-9, புந 56-55.
6வ சனி, அமா 3-29, பூசம் 57-7.

(4) கலி 4463, சுபகிருது, ஆடி—

23வ புதன் கிருஷ்ண த்ரயோதசி 7-47, புந 35-35.
24வ வியாழ. சசி 2-34க்குமேல் அமா 55-33, பூச 32-46.

இன்று நாழிகை 2-34க்குள் வியாழன் சதுர்தசி பூசம்—இவை கூடுகிறபடியால் இன்றைக்குத்தான் அண்ணா அவதாரம்.

இனி அண்ணாவின் பரமபத யாத்ரா வருஷத்தைப்பற்றின டேபிள்:—

(1) கலி 4496, யுவ, பங்குனி—

23௳ சனி, சுக்ல நவமி 46-44, புந 11-47.
24௳ ஞாயிறு, தசமி 48-43, பூசம் 14-41.

(2) கலி 4555, பவ, பங்குனி—

2௳ புதன், சுக்ல நவமி 13-6, திருவாதிரை 17-14.
3௳ வியாழன், தசமி 16-6, புந 21-31.
4௳ வெள்ளி, ஏகாதசி 17-49, பூசம் 24-33.
30௳ புதன், சுக்லாஷ்டமி 50-39, புந 40-28.

(3) கலி 4556, யுவ, பங்குனி—

20௳ திங்கள், சுக்ல நவமி 58-4, புந 37-22.
21௳ செவ்வாய், தசமி 60-0, பூசம் 43-27.

(4) கலி 4554, ஸ்ரீமுக, பங்குனி—

11௳ வியாழன், அஷ்டமி 60-0, மிருகசீர்ஷம் 11-39.
12௳ வெள்ளி, அஷ் 0-24, நவ 59-18, திருவா 13-28.
13௳ சனி, தசமி 57-47, புந 14-6.
14௳ ஞாயிறு, ஏகா 54-41, பூசம் 13-35.

ஆக இப்படிப்பட்ட தினங்களுள் கலி 4555 பவஹு பங்குனிமீ 30௳யில்தான் 50-39க்குமேல் புத நவமீ புஷ்ய யோகம் இருக்கிற படியால் அன்றைக்குத்தான் அண்ணா திருநாடலங்கரித்தாரென்று நிஷ்கர்ஷிக்கப்படுகிறது.

அண்ணா அவதாரம் கலி 4463, (கி. பி. 1362) சுபக்ருத்ஹு. தொண்ணூற்றிரண்டு ஸம்வத்ஸரம் ஜீவித்திருந்து பரமபதித்த காலம், கலி 4555 (கி. பி. 1454) பவஹு.

இந்த விஷயத்தை ஸமயம் வாய்க்கும்போது எந்த ஸதஸ்ஸிலும் ஸப்ரமாணமாக நிரூபித்துக்காட்ட அடியேன் ஸித்தனயிருக்கிறேன்.

தேசிகர், அவரது திருக்குமாரரான நயனவரதாசாரியர், ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா, மணவாளமாமுனிகள் ஆகிய இந்த நால்வருடையவும் அவதார அவஸாந வருஷங்கள் கி. பி. வருஷ முறையில் காட்டப்படுகின்றன.

| அவதரித்தது | | பரமபதித்தது | |
|---|---|---|---|
| கி. பி. 1268 | தேசிகன் | 1369 | கி. பி. |
| 1316 | நயனவரதாசார் | 1414 | |
| 1362 | அண்ணா | 1454 | |
| 1370 | மணவாள மாமுனிகள் | 1443 | |

தேசிகனுடைய 48 ப்ராயத்தில் திருக்குமாரரின் அவதாரம். தேசிகனுடைய 95 ப்ராயத்தில் அண்ணா அவதாரம். தேசிகன் பரமபதித்த மறு வருஷம் மணவாளமாமுனிகளின் அவதாரம்.

நயனவரதாசாரியரின் 42 ப்ராயத்தில் அண்ணா அவதாரம். நயனவரதாசார்யருடைய 50 ப்ராயத்தில் மணவாள மாமுனிகளின் அவதாரம். நயனவரதாசார்யர் பரமபதித்த பிறகு அண்ணா 40வருஷம் ஜீவித்திருந்தார். நயனவரதாசார்யர் பரமபதித்தபிறகு மணவாள மாமுனிகள் 28வருஷம் ஜீவித்திருந்தார். அண்ணா மணவாளமாமுனிகளைவிட 8 வருஷம் பெரியவர். மணவாளமாமுனிகள் பரம பதித்த பிறகு அண்ணா பதினொரு வருஷம் ஜீவித்திருந்தார்.

இது உபய கலா ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் சரித்திரங்களையும் மற்றும் பலவகை உபபத்திகளையும் அநுஸரித்து எழுதப்பட்ட குறிப்பு.

சுபமஸ்து

---



---

Printed at the Imperial Press, Trichy. Edited & published by (Sahitya Siromani) S. Parthasarathi Aiyangar at 252, North Chitra St Sri ngam